உ

# ஓம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ மூலமந்திரப்ரபாவம்.

——(o)——

இது
புதுக்கோட்டை சமஸ்தானம்
வலயபட்டிநகரம்
வைரவன் கோயில்
வயி. வ.
இராமநாதச்செட்டியார்
இயற்றியது.



---

மேற்படியாரால்
கொழும்பு
"ஸ்காந்த" முத்ராக்ஷர சாலையிற்
பதிப்பிக்கப்பட்டது
பிலவ-ஸூ மாசி-மீ உரு-உ

குஹமயம்.

# சிறப்புப்பாயிரம்.

---

இது
யாழ்ப்பாணத்து
நல்லூர்
ப்ர்ம்ஹஸ்ரீ வேங்கடசுப்பிரமணியசாமி சாஸ்திரியா
ரவர்களின் புத்திரரும்
வைதிகசைவ உபநியாசகரும் சிவபுராணப்பிரசாரகரும்,
சைவவைஷ்ணவ கதாப்பிரசங்கியும் ஆகிய
பண்டிதர்,
**ப்ர்ம்ஹ ஸ்ரீ கநகசபாபதி ஐயர்**
இயற்றியது.

---

நேரிசை யாசிரியப்பா.

பூமலி கொன்றைப் புரிசடைக் கடவுளும்
மாமயி லூர்தியு மற்றைய புலவரும்
சங்க மிருந்து தமிழா ராய்ந்த
மங்கலம் பெறுநான் மாடக் கூடலும்
காழிமா நகர்வருங் கவுணியர் பெருமான்
பாழிசே ரமணப் பாதகர் வாதில்
வருநதிக் கெதிர்செல வரைந்துமுன் விடூஉம்
ஒருதமிழ்ப் பாடல்சென் றுறைந்தவே டகமும்

ஆப்பனூரு மரியபூ வணமும்
சீர்ப்பரங் குன்றமுந் திருக்குற் றாலமும்
ஆதிய தலங்களு மகத்திய முனிவன்
மேதினி சமம்பெற விற்றிருந் தருளுங்
குன்றமும் பிறவுங் குலவி நிலைபெறும்
வென்றிசேர் பாண்டி வியன்பெரு நாட்டில்
வண்டிசை படர்ந்து மகிதல மறைத்து
வண்டிசை பாட மலர்ந்து கருநிறங்
கொண்டலை நேர்ந்து குமுறன் மாலைக்
கொண்டலை நேர்ந்து குறுகும் பல்லவத்
தண்டலை மேவித் தண்ணிழல் செயும்பூந்
தண்டலை வளனுஞ் சாருநீர் வளனுஞ்
செஞ்சொற் புலவர் திறம்படப் புகழச்
செஞ்சொற் புலவர் சேர்நிலை யணவிக்
கதிர்மணிக் கோடுடைக் களிறு மாய்த்துக்
கதிர்மணி காலுங் கழனியில் வாளை
வாவிக் கமல மதுவினை யுடைஇ
வாவிக் கமல மயங்குற விடுபு
பண்ணைப் பாடளி பரிவுறச் செய்யும்
பண்ணைப் பாடுறு வளனும் பணிவோர்
சித்தியும் புத்தியுஞ் சேர்வுறக் கொடுப்போன்
சித்தியும் புத்தியுஞ் சேர்தருங் கொழுநன்

கரியா னனத்தன் கரங்குவித் திறைஞ்சுங்
கரியா னனத்தன் கணங்களின் முதல்வன்
ஆகி வருவோ னன்றொரு முதுகரி
யாகி வருவோ னோங்காரத் தோன்மலே
யாண்டியென் றுலகெலா மறைதரு நாமம்
பூண்டுவீற் றிருந்து போற்றுவோர்க் கருளுங்
கிழமைசேர் கணேச கிரியின் வளமும்
சொன்னங் கல்வி துர்வர்ண முடுக்கை
அன்னந் தண்ணீ ரளித்திடு சாலையும்
அந்தணர் மனைகளு மருந்தவர் மடங்களும்
செந்திரு விலாசச் செல்வர் மனைகளும்
நிலயமாக் கொள்ள நிமிர்புகழ் பெற்ற
வலய மாநகர் வாசமுள் ளோன்
தக்ககா வேரி சங்கம மாகிப்
புக்க காவிரிப் பூம்பட் டினத்தில்
இருந்துவந் தளகை யிறைவனு நாணப்
பெருந்தன மீட்டிப் பிரபல தருமம்
யாவையும் புரிகுபு யாரினு மேன்மைக்
காவலராகிக் கனம்பெறு சிலாக்கியப்
பேறுகொள் வசியர் பெருங்குல முதித்தோன்
வீறுகொள் செல்வ வித்தக னாகி
வருபுகழ் கொண்ட வடுக நாதக்

குரிசின்மா தவம்போற் குலவிய பாலன்
மிக்க கல்வியு மிக்க செல்வமுந்
தக்கவர் மதிக்குந் தரம்பெற வடைந்தோன்
வாக்குவல் லபத்தின் மற்றிணை யில்லோன்
நோக்கொடு சந்தமு நுட்பமுஞ் சுவையும்
மீக்கிளர்ந் தோங்க வியன்பொரு ளமைத்துச்
செய்யுள்செய் புலமைத் திறத்தினின் மிக்கோன்
மெய்பெறு சைவ விதிக்கநு சாரி
கற்றவர் தமக்கிரு கையுடைக் கற்பகம்
அற்றவர் தமக்கோ கலா மன்புறுதந்தை
தற்பரன் சிவனெனத் தன்னுளந் துணிந்து
சிற்சபா நாதன் றிருவடி நினைந்து
நெஞ்சநெக் குருக நித்தமுந் துதிப்போன்
அஞ்செழுத் துறுதுணை யாமெனக் கொண்டோன்
எப்பொரு ளெனினு மில்லையென் னுமல்
அப்பொழு தளிக்கு மங்கர் கோமான்
தரும தயாநிறை சற்குண மேரு
பெருமையு மாண்மையும் பீடுறு மூக்கமும்
மெய்ம்மையும் பொறுமையும் விழுத்தவப் பேறும்
செம்மையு நீதியுந் திரம்பெறக் கொண்டோன்
கற்றவர் பாலுங் கடவுட் கன்பரா
நற்றவர் போலு நண்புமிக் குடையோன்

இராம நாத னிணையடிக் கன்பன்
இராம நாத னெனும்பெயர் வணிகன்
பண்டைநாட் கயிலையிற் பார்ப்பதிவினுவ
அண்டர் நாத னருளிய விறையாய்
ஆறு தார மத்துவி தத்திறம்
பேருர் யோகம் பிராணு யாமம்
நாடி சுத்தி நவில்பர காயங்
கூடுஞ் சித்திமுற் கூறிய சித்திகள்
பெறுதற் கரிய பிரம லக்கணம்
அறிதற் குரிமை யாதிய வெவையும்
விளங்குறக் காட்டும் வேத சாரம்
உளங்கொள்ள வுணர்த்து முமாம கேச்சுர
சம்வா தம்மெனுந் தனிப்பெயர் பூண்ட
தும்வேத் தியமுமா யுயர்ச்சி பெற்ற
ஆரிய நூலை யருந்தமிழ்ப் பாடையில்
யாரு மிலகுவி லெய்தி யின்புற
செந்தமிழ் நலங்கொளீஇச் சிறீமது மூல
மந்திரப் ப்ரபாவ மாண்பெயர் புனைந்து
திருத்தகு சுவையுந் தெளிவுங் குதிகொள
விருத்தப் பாவில் விளங்கக் கூறினன்
அப்பெரு நூலை யாய்ந்துண ரறிஞர்
மெய்ப்பொரு ளிதுவென விளங்கித்
தப்பிலாச் செம்பொரு டாமடைகுவரே.

உ

சிவமயம்.

யாழ்ப்பாணத்து வண்ணைநகர் தமிழ்ப் பண்டிதர்
ஸ்ரீமத் மூத்ததம்பிப்பிள்ளையவர்கள் குமாரரும்,
திராவிடகோகில பத்திராதிபருமான
**ஸ்ரீ சதாசிவப்பிள்ளை யவர்கள் இயற்றியது.**

---

எண்சீர்க்கழில்நெடில்

சந்தமலி மூலமந்த்ரப் பிரபாவத்தைத்
தமிழ் மொழியிலொருகவியாத் தந்தான்மிக்க
விந்தைசெறி மதுரைவள வலயநாடன்
மிகுவணிகர்குல ராமநாதச்செட்டி
முந்துபதியமர் வடுகநாதச்செட்டி
முதற்புதல்வன்இக்கவிதைமுறையாராய்ந்தோர்
செந்திருமாலயன்முதலோர்தேர்தற்கொண்ணாச்
சிவஞானச்செல்வர்களாய்த்திகழ்வரன்றே.

---

உ

சிவமயம்.

தேவகோட்டை
வயி· குமு.
**ஸ்ரீ நாகப்பசெட்டியார் இயற்றியது.**

---

வெண்பா.

பொன்பொலியுங்கூடற் புகழனைத்துமேலுற்ற
மன்பதிசேர் மாவலய மாநகரைத்—தன்பதியாய்

வாழ்வடுகநாதனெனு மாவணிகனற்றவத்திற்ச்
சூழிராமநாதன் வாய்ச்சொல்.
சொல்வேதமென்னத் துலக்கிமொழி பெயர்த்தான்
பல்கலையுமாய்ந்த குணபண்பினு—னல்லறிவார்
மாயோகஞானம் வழுத்தும்பிரபா
சீமூலமந்திரத்தின்சீர்.
சீர்பெருகுமிப்புவியிற் செய்தளித்த விந்நூலாற்
பேர்பெருகு மன்னையெனப் புகல்வார்—பேர்பெருகு
மாவிராமநாதன் வழங்குமித் தென்மொழியின்
சீலமறிந்தோர்க டெளிந்து.




---

உ

யாழ்ப்பாணத்து நலலூர்
வைத்தியர்
**ஸ்ரீ ச. வைத்தியலிங்கபிள்ளை இயற்றியது.**

---

வெண்பா.

நீரும் பணியு நிலவுமணி வோற்கன்பு
தேருந் திருமந் திரப்பெருமை—யாரும்
இலகுவினிற் றேற வினியதமிழ்ப் பாவில்
உலகுதொழ வைத்தா னுவந்து.

அறுசீர் விருத்தம்.

யாவனெனிற் பாண்டிவள நாட்டிலுறும் வலயநக
ரினிது வாழ்வோன்.

நாவலர்கள் புகழ்வடுக நாதவணி கன்றவம்போ
னயந்தமைந்தன்.
மேவரிய செல்வமொடுங் கல்விகொடை சிவபத்தி
மெய்ச்சொல் வன்மை.
மாவுலகின் மிக்குடையோன் புகழிராம நாதனெனும்
வசியர் கோனே.

---

உ

சிவமயம்

யாழ்ப்பாணம்

காரைநகர்

உபாத்தியாயர்

ஸ்ரீ சி· சபாபதிப்பிள்ளை

இயற்றியது.

---

கட்டளைக் கலித்துறை.

இந்த வுலகினிற் சைவ மதத்த ரெவருநச்ச
முந்து வடமொழி நின்று பெயர்த்து முறையமையச்
செந்தமிழ்ப் பாவிற் புனைந்து திருமந் திரப்பெருமை
தந்தவ னன்றிய தென்றும் மறக்கத் தகுவதன்றே.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

"அநாதிமலமுத்தராய், நித்தியராய், வியாபகராய், எல்லாவறிவும் எல்லாமுதன்மையும் எல்லாவநுக்கிரகமுமுடையராய், ஆன்மாக்களிடத்தே பதிந்த கைமாறற்ற பெருங்கருணையினாலே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் இயற்றுதியற்றும் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான், ஒரு திருமுகமும், சந்திரன் சூரியன் அக்கினி என்னும் முச்சுடர்களாகிய திருக்கண்களும், கங்கையையும் பிறையையும் கொன்றைமாலையையுஞ் சூடிய சடாமுடியும், சங்குக்குண்டலத்தையும் தோட்டையும் அணிந்த திருச்செவிகளும், காளகண்டமும் மான்மழு அபயம்வரதம் என்பவைகளோடுகூடிய நான்கு திருக்கரங்களும், விபூதியினாலே உத்தூளிக்கப்பட்ட செம்பவளத்திருமேனியும் வெள்ளைப்பூணூலையும் எண்ணிறந்த பிரம விட்டுணுக்களுடைய என்புமாலைகளையும் பிரமகபாலங்களையும் அணிந்த திருமார்பும், புலித்தோலையுடுத்து உடைவாளுடனே கச்சையுடைத்தாய்விளங்குந்திருவரையும், வீரக்கழலும் சிலம்பும் ஒலிக்குஞ் செந்தாமரைமலர்போலுந் திருவடிகளும் உடைய ஸ்ரீ கண்டசரீரியாய், பலவிரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளிமயமாகிய நானாவித சிகரங்களோடுகூடிய திருக்கை

லாசமலையிலே, செம்பொற் றிருக்கோயிலிலே பூதர்க ளுட்பலர் நானுவித வாத்தியங்களைமுழக்க, பலர் இரு புறத்தும் வெண்சாமரம்வீச, வேறுபலர் ஆலவட்டம் அசைப்ப, தும்புருநாரதர்களும் விஞ்சையர்களும் இசை பாட, கணநாதர்கள் என்புகளெல்லாம் அழலிடைப்பட் ட வெண்ணெய்போலக் கரைந்துநெக்குருகவும், சரீரம் நடுங்கவும் உரோமஞ்சிலிர்ப்பவும், மதகினிற்புறப்படுஞ் சலம்போல ஆனந்தவருவிசொரியவும் பேரானந்தப் பெருங்கடலுட்டிளைத்து ஆடிப்பாட, முனிவர்கள் தங் கள்கைகளைச் சிரசின்மீதுகுவித்து வேதசிரசுகளாகிய உபநிடதங்களை எடுத்தோத, அநந்தகோடி சூரியர்களது ஒளியைப்போலும் பேரொளியையுடைய திவ்விய மந் திரசிங்காசனத்தின்மேலே, தமது அருட்சத்தியும் உல கமாதாவுமாகிய உமாதேவியார் வாமபாகத்தில்மேவ மஹாமந்திர பாராயணராய் வீற்றிருந்தருளினர்.''

அப்பொழுது பராசத்தியாகிய உமாதேவியார் எ ழுந்து சிவபிரானைவணங்கி எம்பெருமானே தேவரீர் கணிக்கின்ற மந்திரம் யாது? அதைத் திருவாய் ம லர்ந்தருளவேண்டும் என்று பிரார்த்தித்தார். சிவபெ ருமான் உமாதேவியாரைநோக்கி, "சத்தியே! இது ஸ்ரீ மூலமந்திரம் என்பதாம். இது மிக ரஹஸ்யமானது என்னிடம் இதை எவரும்கேட்டு அறிந்திலர் நீ நம்பிரி யையாதலில் உனக்கு இதன் மஹிமைகளையும் அதற் கு அநுகுணமாகிய பிறவற்றையும், உபதேசிக்கின்றோம்''




என்று எடுத்துரைத்தருளினார். அதைக்கேட்ட உமாதேவியார் இடை இடையே சிலவினாக்களைவினாவ, சிவபிரான் அவைகளுக்கு விரிவாக விடைகொடுத்தருளினார்.

இவ்வாறு சிவபெருமானுக்கும் உமாதேவியாருக்கும் வினாவிடையாக நிகழ்ந்த சாஸ்திரம் வடமொழியில் "உமாமஹேஸ்வர சம்வாதம்" எனப்பெயர்பெறும். இதில் ஸ்ரீ மூலமந்திரமகிமை, அதன் சப்தார்த்தம, ஆறாதாரம், ஸ்வரூபம், அதிபர், அத்துவிதம், சன்மார்க்கமுதலியன, ஆசனமுறை, நாடிசுத்தி, அணிமாதி, பிரமலக்ஷணம், பிரமவைக்கியம், காயசித்தி, குருமகிமை, குருவாக்கியபரிபாலனம், குருசிசுரூஷாப்ரபாவம், பத்தி, ஞானயோகம், பீடலிங்கம், நாதபிந்து, பஞ்சபூதம், அதிதேவதைகள், குறிகள், தூலம், சூக்குமம், பரமம் ஹம்சமந்திரம், பிர்த்தியமஹிமா, அக்ஷரம், அனாக்ஷரம், சத்திகள், பிராணாதி, கர்மயோகம், ஜோதிதரிசனமுதலிய பல உத்தமோத்தம விஷயங்கள் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல் வடமொழி அல்லாத எம்மொழியிலேனும் இதுகாறும் மொழிபெயர்க்கப்படாமலும், வெளியிடப்படாமலும் இருந்ததால், அம்மொழி வல்லார்க்கன்றித் தென்மொழிவல்லார்க்கும் பயனுறும்படி மொழிபெயர்ப்பித்துப் பாடலாகச் செய்தேன். பெரும்பாலும் இன்றி அமையாத இடங்களில் மூலத்திலுள்ளபதங்களைப் பிரயோகித்தும், மற்றை இடங்களில் பிரதிபதங்களையே அமைத்தும் "ஸ்ரீ மூலமந்திரப்ரபாவம்"; எனப்

பெயரும் இட்டிருக்கின்றேன். ஸம்ஸ்கிருதத்திலுள்ள இம்முதநூலை எனக்கு உபகரித்து அதைமொழிபெயர்த்துச்சொல்லிக் கொடுத்தவர் மலையாளம் பொன்னுணி கடிக்காடு குப்புறவல்லி காளத்திங்கள். க. சேகரமேனோன் என்பவரேயாம்.

இலக்கண இலக்கியங்களிலும் வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களிலும் வல்ல வித்துவசிரோன்மணிகள் இப்பாடல்களிலுள்ள குற்றங்களை ஆராயாது குணங்களையே ஆராய்ந்து இன்புறுமாறு கேட்கின்றேன்.

"முத்தமிட்டுறையின் முறைபோகிய
வுத்தமக்கவிகட் கொன்றுணர்த்துவன்
பித்தர்சொன்னவும் பேதையர்சொன்னவும்
பத்தர்சொன்னவும் பன்னப்பெறுபவோ."

"குற்றமேதெரிவார் குறுமாமுனி
சொற்றபாவினு மோர்குறைசொல்வரால்
கற்றிலாவென் கவிவழுவாயினு
முற்றுநாடிவல்லோருய்த்துரைக்கவே"

"அன்னை தந்தை யளித்தமகார்மொழி
யுன்னியாதர முற்றிடுவார்திற
மன்னுநற்கவிவாண ரென்புன்மொழி
யன்னதாகநன்காதரிப்பார்களால்."

வயி. வ. இராமநாதச்செட்டி.

திருச்சிற்றம்பலம்.

கணபதி துணை.

சிவமயம்.

# ஸ்ரீ மூலமந்திர ப்ரபாவம்.

---

வெண்பா.

சீரோங்குசெல்வத் திருமூலமந்திரத்தை
யேரோங்கவே பாடவென்வாக்கில்—நேரோங்கத்
தந்தருளுந்தார்க்கோன்றைச் சங்கரனூர்தந்ததெய்வத்
தந்திமலையாண்டி பதந்தான்.

---

விருத்தம்.

வெள்ளமு மதியுஞ்சூடும்
விரிசடைக் கடவுடந்த
பிள்ளையா முன்னேன்பாதம்
பிரசமென்மலர் தூய்ப்போற்றி
லெள்ளலற்றிந்த நூலி
லியம்பிய பொருள்களெல்லாங்
கொள்ளுதற்குரியவாகுங்
குறையொன்றும் வாராதன்றே.

கலையாண்ட மறைமகளுங்
கவுரியொடு செந்திருவுங்கருதினாளுங்
கலையாண்ட மா்மதியுங்கதிர்மேவு
குலிசமுறுகையோன்ருனு
மலையாண்ட சங்கரனுமாதவனுமங்
தணனுமரபிற்போற்றும்
மலையாண்டியெனுங் கடவுண்
மந்திரச்செங்கமலபதம் வழுத்தல்செய்வாம்

---

கலித்துறை. [தே

கருந்தாதையன்னகடிய வென்னெஞ்செனுங் காட்டகத்
வருந்தாமலேந்துகரங் கொண்டேயார்க்குமொர்வான்களி
திரிந்தாதரித்துத்திருவருண் மாமதந்தேக்க நல்கி [று
யிருந்தாட்கொண்டமர்கின்ற தாலிதுவென்வியப்பே.

வலம்புரிநன் மணமெங்குங் கமழும்வலயநகர்
வலம்புரிநாதன்பதமலர் போற்றிவணங்கிநின்று
வலம்புரிந்தேனவனன்பரைத் தாழ்ந்துவரும்பிறவி[கே.
வலம்புரிந்தேன் வழிகண்டுகொண்டேன் முத்திவாயிலுக்

---

விருத்தம்.

பாவிதாசமயமெனும்படுகுழிவீழ்ந்
தெய்க்கின்றபாவமாந்தர்

பரவிதயமேவியுறு மஞ்ஞானமெனுந்
திமிரபடலங்கீறப்
பரவிரவியென வுதித்துப்பதியருள்
வேதாகமங்கள் பலவுங்கற்றுப்
பரவுசைவ சிகாமணியாயமர்ந்த
குருமூர்த்திபதம் பணிந்துவாழ்வாம்.

---

## அவையடக்கம்.

அம்பிகைதனக்கு முன்னாளருமறைமுளைத்தவாயா
லெம்பிரான்மொழிந்த மூலமந்திரத்தியம்புமேன்மை
யும்பரார்தமக்குமெட்டாதென்றிடி லுலகோர்கேட்ப
வம்பனேனறிந்துகூறன் மாநகைவிளைக்குமன்றே.

---

## முதலாம் அத்தியாயம்.

### நூல்.

அன்பொடுபரமன் மூலமேநாடி
அம்பிகையிடதுபாலிருப்ப
வின்பொடுகோடி பரிதியேபோல
விலங்கினனேத்திரமூன்றாய்ப்
பொன்பொலிசித்தர் முதலினோர்போற்றப்
பொற்புறுகைலைமால்வரையி
னன்பகற்கங்குலொருங்குசேர்ந்தென்ன
நவையறவினிதுவீற்றிருந்தான் (க)

விற்றிருந்தசையாச் சித்திரச்சுடர்போல்
விளங்குறு மோனமாவினிய
மாற்றருந்தன்மை கூடியவமலன்
மானதமெனு முறையாகச்
சாற்றருமூல மந்திரந்தன்னைத்
தகவுடன் கணித்தனனாகிப்
போற்றருமடியார் சூழவேபிரமப்
புகழுறு நிட்டையிற்றங்க (உ)

அன்னகாலையில் வேதத்தின்சுரூபியா
மம்பிகைமலையரசனுக்கு
முன்னம்புத்திரியாகியே வேக
முதல்வனைமணந் துறுசகத்தைப்
பின்னைமீன்றுமெக்காலமுங்கன்னியாய்ப்
பிரிவிலாதுறைதருஞ்சத்தி
யென்னைதாமுரைமந்திரமதனை
யெளியனேற்கருளென விரந்தாள். (௩)

சிறந்தவிம்மொழி சேயிழைவினவச்
சிவபிரா னியம்பிடுமன்பா
மறைந்திடு மூலமந்திரமொன்றுண்
டன்னதை யனுதினமுளியோடு
மறந்திடாதுநன்மனங் கொளப்பயிற்றின்
மறலியுமஞ்சியேவாரா
னிறந்திடார் பிரமத்தினிலயிப்பா
ரியாவரே வியம்பிடவல்லார். (௪)

இந்தமூலமந்திர மந்தணப்பெருமை
முந்தயாவருங்கேட்டிலர் மொழிந்ததுமிலையே
வெந்தனுருடல்கலந்ததா லுனக்கிதுவியம்பச்
சிந்தையோடிதுகேட்டுநீ தெளிகுதியன்றே. (ரு)

வெளிவிடாவிதையுனக்கு நாமுரைத்தனமிதனைக்
கிளியனுய்கிளர்பத்தியாற் பன்னிரண்டாண்டு
தெளிவதாய்க்குருமனப்படிசென்னெறிசென்ருற்
களிபெரும்பரிவுற்றபின் சமறுதல்கடனே. (சா)

பண்டிதக்கெறுவாயேனும் பாக்கியம்வேண்டியேனுங்
கண்டிடப்புத்தியில்லாக் கலக்கத்தாலெவருக்கேனுந்
தெண்டிரைகொழிக்குங்கூந்தற் றேமொழிபகர்வாராளுற்
கொண்டிடுமாயாசாபங் குவலயப்பிறப்புமாமே. (எ)

பெருமையாகியவிரகசியப் பிரிவினின்பேற்றை
யருமையாயவையாவையுந் தனித்தனியறைவே
னுரிமைமூலத்தினுதித்தது தானெழுகோடி
யரியதாமதன்மாற்று மந்திரமதனளவே. (அ)

வர்ணமந்திரஞ்சுரங்களா யுள்ளனயாவுங்
கர்மஞானமாமனுட்டித முதலியகலையுஞ்
சர்வமூலத்தி லுதித்தது தலைமைசேரதன்சத்துப்
பிர்மமல்லதுவேறிலைப் பேசிடுங்காலே (கூ)

ஆதலாலிதைச்சீடனே சாதுவாய்க்குருவின்
பாதஞ்சேர்ந்துமெய்ப்பத்தியா யுணர்ந்துமெஞ்ஞான

போதமுள்ளவனுயிடி லவன்றனிப்புகழை
யோதக்கேட்கவுமொண்ணுமோ வோதிமத்திறைக்கும்

உனதுருவென்பமாதே விந்துவின்பீடமாயொளிரு
மெனதுருவென்பதேதா னுதலிங்கத்தினியல்பதாகு
மனதிவிவ்வழிகண்டிடும் பத்தர்கண்மயங்கார்
கனதுரிதமாயட்டமாசித்தியு முத்தியுங்காண்பார் (கக)

விருப்பமாமிதையுரைத்து டன்சமாதித்தனுகி
யருப்பமெய்யெங்கணுஞ் சிலிர்த்திடவசையா
திருப்பவானந்தமூழ்கியே வமலனங்குறையப்
பெருப்பதாமூலமா தொருவாசகம்பேசும் (கஉ)

நாதமென்றதின்மந்திரம் வந்திடுநலனும்
போதமாமதினுச்சரிப் பென்பதின்புலனும்
வேதமாகமமாதிய சொல்லினின்விரிவுங்
காதலாகியசுரூபமாஞ் சகலமுங்கழறீர் (கங)

மலைமகளுரைகேட்டலு மாதவன்பகர்வா
னலைவிலாமனமுள்ளினி லனுதினமுயர்மாயா
வலையிற்சென்றிடாவிசாரத் தாற்காணுவதுருவம்
விலையிலாவிதுமந்திர மென்பதின்விரிவே (கச)

மந்திரமனைத்தினுக்கு மூலமாயுயிராய்நிற்குந்
தந்திரமாகமூலாதாரத்தி லிருப்பதாலுஞ்
சந்திரவிம்பம்போலச் சகலமுநிறைந்ததாலு [ர்.
மிந்தமாமறைமெய்யேவென்றெடுத்தியம்பிடுவர்மேலோ

நாதமெங்கணு நிறைந் தசையாததாம்பிரமம்
பேதநீங்கியபரவணுவா மிதைப்பெரியோர்
காதல்கொண்டுமே யிலக்ஷயமாகவேகண்டா
ராதலாலி தையுச்சரிப் பாமென்பதறியே (கசு)

அண்டபிண்டசராசரமனைத் தினுமணுவணுவாகக்
கொண்டகாக்ஷியா நூல்வழி யதுவதின்குணம்போல்
விண்டிடாத்துயர்மாய்கையா னிறைந்ததாமிதனைக்
கண்டுகொள்பவராரிதி து சூத்திரங்காணே (கஎ)

---

சூத்திரத்திருந்து வுதித்தனமாயா
துலங்கவே யதனிடம்பிறந்தார்
காத்திரமாக மாதேவியென்பாளுங்
காரணமென்மகா லக்ஷமியு
னேத்திரமான சரசுவதியிவர்க
ணிலங்களிற் குணமதாய்க்கலந்து
பாத்திரத்திருந்த வருவம்போல்விளங்கிப்
பகரொணு முத்தொழில்புரிவார் (கஅ)

சொல்லொணுமாய்கைச் சோபத்தினின்றுந்
துலங்கிய விந்துவின்பீடம்
வெல்லொணுவது வாய்ப்பிழந்துமேநாதம்
விருத்தியாய்ப் பிராணவாய்வோடு
பல்லொருங்காணக்கூடினமதிதான்
பார்புகழ்சித்தமாயொளிரும்

நல்லவர்ஞானகுருவினாலறிந்தா
  னன்மையாய்ச்சீக்கிரம்விளங்கும் (கசூ)

விந்துவிற்பிறந்ததூலமென்றதுவும்
  விளங்கியசூக்குமந்தானு
மந்தகற்கறியும்பரமதாஞ்சோதி
  யாகியும்பிரமமைவழியா
மிந்தமெய்த்தூலமென்பதுவிராட்டா
  மியங்கியசூக்குமமறியிற்
பந்தமிலுருவேசதாசிவனுடையாம்
  பகரொணாநாதவான்மாவாம் (உ0)

அன்னதே தேசோவுருவமாய்விளங்கு
  மதுவதேவேதவிக்கிரகந்
தன்னதாயொளிருஞ்சோதியாம்பிரமஞ்
  சத்துச்சித்தானந்தமாயு
மின்னதாமிது வென்றிடமதுகுறிக்க
  வெண்ணிக்கமுடிவிலாப்பொருளாய்ப்
பின்னமில்லாதுசூக்குமவுருவாய்
  வினைப்பயனணுகிடாவிதுவே (உக)

குருவினலறிந்த ஹம்ஸமந்திரத்தைக்
  குணமதாவிடையின்றிச் செபித்தாற்
றிருவதுவுண்டாய்ப் பரமதினுண்மை
  தெரியுமா மவரனுபோக

மருவுறுவுண்மைச் சித்திலக்ஷணந்தான்
மண்ணினிற் றீபத்தைப்போலு
மிருளதுவிலக்குஞ் சோமனைப்போலு
மிலங்கிய மின்மினிமற்றும் (உ௨)

இடியினுலொளிரு மின்னலைப்போலு
மிலங்கு வாட்டாரகைபோலுந்
துடியிடைமாதே பாற்கரனுயுஞ்
சூக்குமவுருவமாய்க் காண்போர்
கடிதினிற்றன்னைத் தானுமேயறிவார்
காட்சியா யட்டசித்தியுந்தான்
மிடியிலாவதுவாய்க் கூடிடுவர்தான்
வெளிப்படாப் பிரமமேயாவார் (உ௩)

சாந்தியிற்பெரிதா மந்திரமில்லைச்
சார்ந்துண ரனுவதையன்றிக்
காந்தியாந்தெய்வம் வேறென்றுமுண்டோ
காதலாந் தியானத்தையொழியப்
போந்திடுபூசை தானுமெங்குளது
புகழ்ந்திடு திருப்தியைத்தவிரக்
காந்தண்மென் கரத்தாய்கருதியபலங்கள்
கண்டிடிற் பிறிதொன்றுமிலையே (உ௪)

ஒருவருமறியா விரகசியப்பிரீதி
யோகிகள் சித்தமாமொளியைத்

தருவதா மூலமந்திரப்பெருமை
  தடையிலா மோக்கமெய்த்துவார
மருமையாலதிக முயற்சியாலுனக்கு
  வதுவதின் குணங்களையறைந்தேம்
பிரிவிலாவிதனை யறிந்திடுவாரேற்
  பெயரினோர் மாத்திரைபெயர்ப்பார் (உரு)

சிறந்திடுமிதனை யெனதுநற்றொண்டன்
  செறிவுற வுணர்வனேயென்னி
னிறைந் தறைகின்றபூரணமாவா
  னேசமாய்ப் பிரமத்திலயித்துத்
துறந்திடுங்கிலேசஞ் சவுக்கியமாகத்
  துலங்கிடுஞ் சுத்தமாச்சித்தந்
திறந்துடன்குருவை யானெனநினைக்கிற்
  சீக்கிரஞ் சித்தியாமன்றே (உசா)

இவ்வழிதவரு துறைந்திடுபிருத்திய
  னெண்ணிலாத் தவத்திலுதித்தோன்
செவ்விதேவந்தில வன்மனத்தெளிவிற்
  சீக்கிரனுதந் தானுளிரும்
நவ்விநீகேட்ட மொழிக்கெலாமுரைத்தோம்
  நலந்தருமிது முதற்பாக
மவ்வழிநடந்தாற் பிரமமேயாவா
  ரதுவுண்மை யுண்மையாமன்றே (உஎ)

முதலாம் அந்தியாயம் முற்றுப்பெற்றது.

## இரண்டாம் அத்தியாயம்

---

திருவருட்கொண்டே யுரைத்தமுற்பாகஞ்
செவியது வாரவேநுகர்ந்தே
னருடருமமிர்த மூயின்றவராசை
யடங்குவதில்லை யாாதுபோ
லுருவிலாப் பிரமரகசியத்துண்மை
வுணவுணத் தெவிட்டிடாவதனுன்
மருவாவின்ன மென்மனங்தெளிய
வழங்கென் றருளுட்பொருள்வாலே (க)

என்றசொல்வினவி யெம்பிரானன்பா
யேந்திழை மதிமுகனேக்கி
மன்றநின்சங்கை யனேத்தையுமின்னே
மனங்கொள வுரைக்குதியென்னி
லொன்றநின்னுள்ள மறிவுறுமாறு
வுணர்த்துது மென்றிறைவிளம்பக்
குன்றுறண்முலையாணன் றெனக்கேட்டுக்
குதூகலமடைந்த பின்சொல்வாள் (உ)

அக்கரமென்றவ ஞக்கரமுதலா
மாகியவிந்துவின்விரிவு
நிக்கயமாகச் சோபிக்கும்வழியு
நீங்களாச்சித்திகளனைத்து

மிக்கையாயிருந்து வருகுவதெங்கே
யெனுமையமிரிவுற்றுமாயப்
பக்கம்வைத்தென்னையுரைத்திட
வேண்டும்பத்தர்களுளமமர்பதியே (௩)

அங்கயற்கண்ணி யுரைத்தசொற்கேட்டே
யானந்தமூழ்கியே வையன்
கொங்குசேர்குழலுமை யவடன்னைக்
குறிப்பொடு நோக்கியேபகர்வா
னிங்கிதமுடைய விரகசியத்தெளிவு
மியங்கியசித்திகள்பலவு
நங்கையினெல்லிக் கனியெனச்சொல்வ
னவின்றிடோ மற்றவர்தமக்கே (௪)

உனக்குநானுரைத்த சித்தியையுணர்வோ
ருலகினிற் பிறக்கிலருனது
மனக்கினிற்கொள்ளு முக்காரப்பிறப்போ
மாற்றரும்பரம மாநாதங்
கனக்கருஞ் சத்தமென்றதேபிரமங்
கருத்துறு மூலத்தின்சத்தி
நினக்கினமுடைய விதுபராசத்தி
நீழ்விந்துருபமற்றிதுவே (௫)

வித்தினிலிருந்து முளைவருமாபோல்
விளங்கிய நாதமுமுண்டா

மத்தியமான வித்துவானுணர்வான்
  மயங்கிடா தெங்கணுனிறைவா
யுத்தமமான யோகிகளறிவா
  ருட்கமலத்தினிறெழிவாஞ்
சித்தமேயமர்ந்த தேவியின்பெயரோ
  சிறந்திடு முத்திபமாயா (சு)

மூலமாதாரத்திருந்த விந்ததுதான்
  முடிவிலா வம்பரவெளியிற்
சீலமாய்லயித்து வுச்சியேமுதலாஞ்
  சிறப்புள விடங்களிற்றிரிந்தே
கோலமதுயிராயன் பத்தொன்ருகிக்
  குறினெடி லக்கரப்பிறப்பா
மேலதாமவைகள் சேர்ந்ததுபதமாம்
  விரிவினம் வருமனுபோகம் (எ)

அப்பதங்கூடிச் சேர்ந்ததுவாக்ய
  மதுவெலாஞ் சேர்ந்ததையுரைக்கிற்
றப்பிலாக்காம்ய மந்திரம்வேத
  சாஸ்திரபுராண காவியங்க
ளொப்பிலா வதுவேபலவிதபாஷை
  யொளிதரு மேழிசைக்கீதஞ்
செப்பிடுநாதத் துதித்ததுவென்றே
  தெரிவுறக் கிளத்திடலாமால் (அ)

இவ்விதத்தொங்யாய் வர்ணமாய்ப்பதமா

யியங்கிடும் வாசகமாகச்
செவ்விதேயறையி லிலங்குமெப்போதுஞ்
சிறந்திடுநிறைவதன் பெயரோ
நவ்விசேரம்மவைகரீசத்தி
நவின்றிடுயோகிகளிதனைப்
பவ்வியமாகத் தன்னுளேயறிவார்
பகரொணாப் பிரமத்தின்வடிவே (கூ)

சரஸ்பதியோடு கூடியேவியங்கிச்
சார்ந்திடும் பெருமையிதறிந்தோ
ரரசருமவராம் வாக்கினின்சித்தி
யடைகுவர் நிகமசாத்திரங்கள்
கரவிலாப்புராணத் தலைவராயிருப்பார்
கருத்துடனிது மறைநான்கின்
சிரமதாய்விளங்கு மாதலினுணர்ந்தோர்
சித்தர்தஞ் செயலினுட்டிளைப்பார் (கo)

அரனுரைகேட்ட வமபிகைபகர்வா
ளக்கரத் துண்மையின்றிருவோ
பரமதாய்விளங்குங் கச்சத்தைநிறைவாம்
பத்தியாய்த் தெளிந்தனனிதன்மேல்
வரமருண்மனத்தோடனைக்கரப்பிரமம்
வந்தவா றுரைத்திடல்வேண்டும்
பிரமமாயமல யோகிகடெளிவாம்
பிஞ்ஞகா வெவ்வழித்தியானம் (கக)

தவத்தினிற்சிறந்த வாலையே
விந்துதலையதா ஞதசோமனுமா
யவத்தையில்லாத சூரியன்வாயு
மனைத்துமே விந்திரியங்கள்
பவத்தினைநீக்கு மனமதிலயிக்கும்
பார்த்துமே மௌனமாயிருந்தா
னவமத்துவாயிற் சடலமும்பூதம்
நானெனச் சர்வலோகமுந்தான் (கஉ)

உப்பதுவப்பிலேலகீ பவித்திடுஞ்சூட
னுருகியே நெருப்பினிலயிக்கு
மப்பதமாகத் தத்துவமெல்லாமள
விலாப்பிரமத் திலடையுஞ்
செப்பியவிதனை யறிந்திடில்வேருய்த்
தெரிவதற் கிருந்ததொன்றில்லை
விப்பதந்தன்னை யடைந்தவர்தமக்கு
வினிப்பயன் வேண்டுவதிலையே (கங)

இப்படியான ஞானத்தைத்தவரு
திருந்துமே விசாரஞ்செய்கால
மெப்படியெனினுந் துக்கம்வந்துதிக்கு
மிவர்குருக்கூட வங்கிருந்தா
லப்படியான சோகங்கணிங்கி
யசைவிலா மனமதுயோகங்
தப்பிடாத்தன்னைத் தானுமேபார்த்துச்

சகலமும் லயித்திடுமோதோ (கச)

ஆதியேமுதலா மந்தமேவரைக்கு
மருகியபுத்தி யிந்திரியம்
வாதிக்கக்கூடுஞ் சுகதுக்கமிரண்டு
மனுபவ வக்கரமயமாம்
பேதியாதொளிரு மக்ஷரமொன்றே
பிறந்ததுவன்றி வேறுள்ள
சாதியாயிருக்கும் வஸ்துவை
நிராக்கரமென்றே சாற்றலாகும் (கரு)

அங்கமொன்றில்லா மனுக்கரப்பரமா
மனுவதின் வடிவமேபிரம
மங்கைநிர்விசேஷம் நிரஞ்சனமாயு
மலக்ஷண மலக்ஷியந்தானுய்ச்
சங்கையிலபாரம சிந்திநிர்மலமாஞ்
சார்ந்திடுமன நிலேச்சுரூபந்
தங்கலில்லாத சிந்தையினுபமாஞ்
சகலபூதங்கட்காதாரம் (கசு)

ஆதாரமில்லா திருந்ததுமதுவே
வனுமயமப் பிரமேயஞ்
சாதுவாந்தேசந் தன்னெடுவெளியாஞ்
சலனமு மதற்கிலேயாகும்
வேதத்தினுண்மை வாசாமகோசரம்
விளம்புறுதற்பரமமல

மோநதாமுருட்சியகலமொன்றிலது
மொழிவதா மிலக்கணமிதுவே (கஎ)

சத்தமொன்றில்லைப் பரிசத்திறனுஞ்
சார்ந்திட வுருவமேயில்லைப்
பத்தர்களயிக்குங் கண்ணிலாவத்து
பரவெளி நாசியுமில்லைச்
சித்தர்கள்வணங்க வெங்கனுமிருக்குஞ்
செவ்வியேயவர் மனத்ததுவாம்
வித்தகமோனமா வெலாச்சுரூபம்
விளங்கிட வடிவமுமின்றே (கஅ)

சத்துவுமதுவே யசத்துமாய்விளங்குஞ்
சத்துக்கண் மனமதற்கிணங்க
வித்தைைப்போல மாத்திராசுரூபம்
விளங்கிடப் பாவனையெல்லாந்
தத்துவமாக்கி முடிப ... துவே
சகலமும்மறிந்திடுங் குருவின
சித்தத்தை நன்றாய்த்தெளிந்திட
வேண்டுந்தெரிவிலா தவர்க்குரைகூடா (கசு)

பிர்மமேகர்மஞ் சுரூபமெப்பற்றும்
பிடிப்பதொன்றிலைக் குணங்கள்
வர்மமில்லாத சாந்தமாமதுவாய்
வந்திடுமெவ்வழிக்கூடுஞ்

சர்வமாமொளிவே யஞ்ஞானமாயா
சாடிய விருட்டினினுள்ளே
கர்மத்துக்கேற்பப் பிரதிட்டையாகுங்
கருணைக்குமுயர் குறையுண்டோ (உ0)

இவ்வகைப்பிரமந் தொண்டர்தம்மனம்
போலியங்கியே நடைபெறச்செய்து
ஒவ்வுதலில்லா ப்ரபஞ்சக்கடலை
யோட்டியே மோக்கத்திலடைக்கு
மெவ்வகைவழிக்கும் பத்திதான்முதன்மை
யெனவிந்துநாதத்தினொளிவாஞ்
செவ்விதுமாதோ பெருமையான்மனது
சென்றிடா வேறொருநிலையில் (உக)

என்றன்மேலிச்சித்திருந்த பத்தியினு
லேதுவாமிருதயவழியாய்ச்
சென்றுடன்லயித்தமந்திரத்தாலே
க்ஷேமமாய்மோக்ஷலக்ஷயந்தான்
பொன்றிடாவைத்துப்பாவிப்பார்தமக்குப்
புகலுறுபிறவியுமில்லை
வென்றிடவெல்லாக்காரணங்களுக்கு
மேலதாமுன்னதின்செயலே (உஉ)

தேகத்தைவிட்டுயிரதுநீங்கிச்சென்றது
ளெப்படிமனத்தின்

வேகத்தாலெண்ணம்வருவதுபோல
மீட்டுமப்பிறவியுண்டாகுஞ்
சோகத்தைக்கொடுக்கும் விஷயங்களதனிற்
சொக்கியேயனுபவமுற்றோர்
மோகத்தின்படிக்குச்சித்தமேலயிக்கு
முடிவிலாவிஷயமப்போகம் (உ௩)

நித்தியசுரூபனாகியவென்னை
நித்தமுநினைப்பவர்தமக்குச்
சத்தியமாகவவர்மனோதிடத்திற்
சார்ந்திடும்யாவற்றும்விளங்க
வுத்தமமானசொர்க்கத்திலுண்டா
முயர்வுளவீசுரத்துவந்தான்
முத்தியுந்தானாய்நிறைந்தநற்பெலமு
முடிவிலாச்சத்தியுமுண்டாம் (உ௪)

இரண்டாம் அத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

## மூன்றும் அத்தியாயம்.

---

எனதுதொல்லன்பிற்கலந்தநல்வாக்கா
லெடுத்தினிதுரைத்தனவன்றி
மனதினின்ஞான யோகத்தின்சாரம்
வன்புள்ளமூன்றதாம் பாகங்

தனமதுசிறப்பாம் விரதமெப்போதுந்
தவறிடாவுத்தமமிதனை
வினவுவோய்க்குரைப்போ மையமற்றிடவே
விளங்கிழாய்கேண்மெனவிளம்பும் (க)

ஓர்ந்திடுமழியா மனமதைச்செலுத்தி
யுணர்குவாய் தேகத்தினுண்மை
சார்ந்திடும்வாச னுலுடனுறு
சர்வமுமடங்கியவுடம்பைச்
சேர்ந்திடுந்தாரிபத்துள நாடிதெரிந்திடாப்
பாதையில்நடக்கு
மார்ந்திடும்வாயு பத்துமங்கிலங்கு
மளவிடா விந்திரியத்தசமாய் (உ)

இவ்விதமாகப் பிரமத்தினொளியை
யிலங்கிடா மறைத்தங்குவைக்கு
மவ்விதவுடம்பி னுள்ளினிலிருமூன்
ருதாரவிடுண்டாமத்தி
நவ்வியங்கிருக்கு மனுதாரமாறு
மறுபத்துநாலுயோகினிகள்
செவ்விதாயிருக்குஞ் சங்கமுநாலு
நிபமாஞ் சுரூபமெய்வேதம் (ங)

அந்தநல்வீட்டில் விந்துவுநாத
மன்புறு மகாலிங்கமற்றுஞ்

சொந்தமாய்ச் சிவசத்திகள்கூட்டந்
துலங்கிய சிவாலயமுடம்பு
இந்நல்லுயிரே தேகிகட்கெல்லா
மிம்மையிற் சித்தியைக்கொடுக்கும்
பந்தமாயிருக்குங் குதத்துக்கும்பீசம்
பதிவிடமத்தியில் விளங்கும் (ச)

முக்கோணவீடாய் மூலமங்கிருக்கு
முளைத்திடுஞ் சிவசத்தியதனில்
விக்கினமில்லாத் தீபம்போலொளிரும்
விண்டுகொள் குண்டலிசத்தி
முக்கியமான மோக்ஷமெய்ச்சுரூப
முதல்வியாம் பராசத்தியங்கு
வைக்கியமாகப் பிரதிட்டையானு
ளதிலுண்டாம் விந்துவினொளியே (ரு)

அச்செயல்வளியாய் நாதமுண்டான
வதினொளிவம்ச மந்திரந்தா
னிச்சையாமனது வுண்டுபட்டதுவே
யியம்பொறுக் காமரூபிணியா
மிச்சமாமாசை பீடமங்கிருக்கு
மின்னுறு மிலிங்கமூலத்தி
லுச்சியிலாருஞ் சுவாதிட்டானமென்னு
முத்தம சக்கரவிதமே (சா)

பத்திதமுடைய நாபியின்பீடம்
பகரொணு மணிபூரகத்தானஞ்
சத்தியே நீயாமிருதயந்தன்னிற்
சார்ந்ததுமனுகதபீடஞ்
சித்தியையுரைக்கிற் பன்னிரண்டிதழாந்
தெரிவரிச்சக்கரமாகு
முத்தியாய் விளங்கப்பூரணமாக
வுரைத்திடு பேச்செலாமதுவே (எ)

அணலுறுகுழியிற் பதினறிளிதழா
யறிவுறு விசுத்தியதுறையு
மணமுறுபீடமா னதின்பெயரோ
மறுவிலாதியா ளந்தரமெனலாந்
தணலுறுபுருவமத்தியி லிரண்டாய்ச்
சாரிதழொட்டியாண பீடங்
குணமதாய்ச்சுசியி னுருவதாவிளங்குங்
கோதிலாச்சக்க ரோத்தமந்தான் (அ)

தேவன்மாரிருந்த தானங்கடன்னிற்
றேவிமார்கூடவே யொளிர்வர்
பாவிக்கமுடியாச் சாம்பவியோகம்
பகருவே னுறுதியாக்கேளு
மேவியபூமிபாதாள சொர்க்கமிவைகளின
டப்பதோர்வழியா
மாவியாய்விளங்கு மம்முறையுணர்வா
யதனுறு லட்சியமுரைப்பேன் (கூ)

மூலமாதாரத்ததனின் முக்கோணமுண்
டந்தச்சக்கரவிதனால்
சாலவேகணேசரவ் விடமமர்ந்தார்
தளமது மாறதாய்விளங்குங்
கோலமாம்பிரமாச் சுவாதிட்டானத்திற்
குடிகொண்டார் மணிபூரகமதனி
லேலவேவிண்டுவர்த்த சந்திரன்போ
லிலங்கியே யிருப்பர்பத்திதளில் (க0)

அனாகதமதனிற் றுவாதசதளமா
மங்குள வுருத்திரனுமையுந்
தனிமுதலிருக்கு முக்கோணமதுவே
சார்விடமக்கினி மண்டலமாந்
தொனிவருங் கண்டமறுகோணபீடந்
துலங்கிய விரெட்டாமிதழில்
வினையிலாவறுக்கு மீசுரத்துவமாம்
விசுத்தியே வாயுமண்டலந்தான் (கக)

யோகத்திற்சிறந்த சதாசிவனிருப்பை
யோதிலோ வாக்கினையதனிற்
பாகமுக்கோண மிரண்டதுதளமாம்
பார்வதி யாகாசமண்டலமே
தேகத்திற்சிறந்து வவ்விடமிருக்குந்
தேவனே யக்கினிவடிவா
மோகத்தின்படிக்குப் பலவிதவுருவா
முத்திக்குஞ் சித்திக்குமதுவே (கஉ)

இந்தநன்முறையே தியானிக்கவேண்டு
மிதுவரை சிவயோகத்தானஞ்
சிந்தைகூர்ந்துனக்கு வர்ணித்தேனினிமேற்
சிறந்திடும் நாடிச்சக்கரங்கே
ளந்தமூலாதாரத்தி னடியினிற்சரிந்தே
வழகுறுகுழலினின்றலையை
விந்தையாய்ப்பாதி வெட்டினபோல
விளங்கிடும் பிரமமாநாடி (கங)

ஆகிடுமதுவே வுச்சியிற்பிரமமடங்கிய
வெந்திரம்வரைக்கு
மேகிடுமதுதான் சுழிமுனைநாடி
யிலங்கிடுமதனிடப்பாகம்
வேகமாய்நடக்கும் வாயுவிற்கூடி
விளங்கிய சந்திரனுருவாய்ப்
பாகமாய்வலத்தி லாதித்தனுருவாயப்
பரம்பிடும் பிங்கலைநாடி (கச)

இதைவிடவிருந்த நாடிச்சக்கரங்க
ளிலங்கிய நாபியின்வட்ட
மதைச்சொலின் குக்குடாவண்டத்தின்
வடிவாயமுகிய நாடியாம்நரைகள்
சிதைவிலாதங்கே பிரதிட்டித்திருக்குஞ்
செல்வியே முகத்துடனவியும்
விதையினினின்று வெடித்துயர்மரம்போன்
மேலெங்குங் கீழ்குறுக்கோடும் (கரு)

காந்தாரியென்னு மஸ்திசிகுவையாய்க்
   கண்டபேர் நாடிகளிரண்டின்
பாந்தமாமங்கி வாயுவேகூடிப்
   பகரொர்ணுக் கண்ணினிரெளிவை
வீந்தனவதுபோலு சாவலம்புசாவா
   யிரண்டுளநா டிகளதனுட்
சாந்தமாய்ப்பற்றிக் கேழ்விக்குவழியாய்த்
   தங்கிய காதிரண்டுள்ளே (கசா)

சுக்கிலநாடி புருவத்தின்மத்தி
   துலங்கிய சதாசிவனருளான்
முக்கியமாகுஞ் சந்திபாச
   மூதலியகாமியங் கொடுக்கும்
பக்குவமான விசோதரிநாடி
   பார்யே சதுர்விதவுணவைத்
தக்கதாயுண்ணுஞ் சரஸ்வதிநாடி
   தங்கிய நாவினினத்தம் (கள)

பயசினியென்னும் நாடியேசுருக்கிற்
   பார்ப்பதி சலந்தனையுண்டுஞ்
சுயவதிகாரத் திருந்தநற்பசியைச்
   சொல்லொணுப் பெரியதாக்கொடுத்துந்
தயவுடன்கபத்திற் கூடியேபுத்தி
   சாதிக்கு மனமுதலிடங்க
ளயர்விலாப்பெலமுஞ் சுகதுக்கமனைத்து
   மாடிடற்பாலதாமன்றே (கஅ)

சங்கினியென்னு நாடிதான்கண்டஞ்
 சார்குழிக் கீண்முகமாகித்
தெங்கெனும்விருக்க முண்டநீர்போலத்
 தினமுண்ணுஞ் சத்துநல் ரசத்தை
யங்கத்தினுள்ளி னெடுத்துமெய்ப்பிரம
 மாடிய யெந்திரத்தடியிற்
றங்கிட வமிர்தமாக்கியே வைக்குந்
 தகவுறுமிதன் செயலதுவே (கக)

முன்னமேவரைந்த நாபியினின்று
 முழங்கிய கீண்முகநாடி
சொன்னதுவதிக மிருப்பினுமதனிற்
 சொலித்திடு நாடிதான்மூன்று
வன்னதிற் குகுவென்னுமோர்நாடி
 யங்குள மலத்தினைவெளியி
லுன்னியேதள்ளும் வாருணிநாடி
 யுதைத்திடும் நீரதைவெளிக்கே (உ0)

வாருணிநாடி யுள்ளினினின்று
 வந்ததோர் நிவிகிநாடி
காருண்யமான விந்தியமதனைக்
 காட்சியாய்த் தள்ளிடும்வெளியி
லாரணியிதனை யறிவுறக்கூறு
 மருமைசேர் விந்துவின்சுருபங்
கூரணிமனத்தோ டறிகுவையதனிற்
 குணத்தினின் பிரிவுகளனைத்தும் (உக)

தூலசூக்குமப் பரமெனமூன்றுள
சீல்மாமதிற் றூலஞ்சுக்கிலம்
வாலேசூக்கும பஞ்சக்கினியொளி
கோலமாம் பரவிந்துசதாசிவம் (உ௨)

பஞ்சின்மெல்லடிப் பாவைகேண்மதி
யஞ்செனுந்தொகை யடைவிற்பெற்றிடும்
விஞ்சுதீஞ்சுடர் விரவுந்தன்மைக
ணெஞ்சிற்றேர்வுற நிகழ்த்துவாமரோ (உ௩)

காலவங்கியாய்க் கருதுமோரரி
பாலநேத்திரீ பகர்வயிற்றின்கீண்
மேலதாகவே விளங்கிற்றங்குமாற்
ருல்மார்பெயர் தாளமென்பரால் (உ௪)

அங்கவங்கியு மரியவாயுவுந்
தொங்கமாகவே தொல்லுடம்புறீஇ
விங்தையாகவே விளங்கித்தோன்றுற
மூந்துநாதத்தை முறையிற்றந்ததால் (உ௫)

நத்துமிப்பியு நண்டுமுத்தமுங்
கத்துவார்திரைக் கடலின்மத்தியில்
வைத்தெரித்திடும் வலியவக்கினி
வத்திமத்தினின் மாபிற்றங்குமால் (உ௬)

மாத்துங்கல்லினும் வதிந்தவக்கினி
யாத்திற்பார்த்திப மென்றபெயரொடுங்

திரத்திறுபியிற்சேர்ந் திலங்குமாற்
றெரிந்துளோரதைக் கிரணிமென்பரால் (உஎ)

---

அந்தராளமாயறைந்திடு மந்தரச்சுசியை
விந்தைசேருட றன்மிசை யுள்ளுறுமொலியு
மைந்துசேருருவாதியா மிலங்கிடவமையுஞ்
சிந்தைகொண்டுநீகேட்குதியெனப்பினுஞ்செப்பும் (உஅ)

சலத்திலாதித்தனுருவமாய் விளங்கிடுநெருப்பைப்
பெலத்தவுந்தியின் மண்டலஞ்சுற்றியேவிளங்கச்
செலுத்தவானதில்விடவுரு நீங்கிலாச்சிறந்து
வொலிக்குமாக்கையை யுயிரிணுங்கூற்றெனவுணர்த்தி

புருவமத்தியின் பரவிந்துநிறைஞ்சுத்தப்படிகந்
திருவுடையது சதாசிவ தேவனுச்சூக்குமநிறைவா
முருவிளங்கியவுயர்வதா மதினுண்மையிதுவே
யருளப்பற்றவர் செயலதுயறியவுமாமோ (௩௦)

உச்சிக்கமுள்ளா நாவுக்குமத்தியின்னமிர்தை
கச்சின்மென்மூலக் காரிகையுணர்சந்திரநாடி
ரச்சித்தெப்பவுங் கீண்முகநோக்கினவயிற்று
ணிர்சையோடுமே பொழிந்திடுமுயிர்க்குணவாக (௩௧)

சொன்னவக்கினி வைந்ததின்பிசங்கடவரு
மன்னசித்தத்திலழுக்கிலாப் பத்தியாம்வழியே

யுன்னிப்பூசிக்கிலவ னுண்ணும்விஷமுதலனைத்துங்
கன்னிநீங்துமே செமித்திடுமதிற்குறைகாணு (கூ௨)

---

அப்பியாசமதனற் சதாசிவவுருவை
யறிந்த மெய்யனுபவத்தவனே
யொப்பிலாதுயர்வாய்ப் பூசிப்போர்தமக்கு
யொளிதரு மசுவமராயாகங்
தப்பிலாச்செய்த பலனதுகிட்டிச்
சார்குவர் சொர்க்கத்திற்பெரிதாஞ்
செப்பெனுங்தனத்தாய் தேவன்மாருடனே
தெளிவுடனனங் கித்திருப்பார் (கூகூ)

மூன்றும் அத்தியாபம் முற்றுப்பெற்றது.

---

## நான்காம் அத்தியாயம்.

பாசமாம்வினையினலே பந்தித்துப்பசுக்கடம்மை
நேசமோடவற்றைநீக்கி நின்மலவீடுநல்கு
மாசிலாவப்பர்தம்மை யம்பிகையன்பினேக்கி [ள்
யீசனேயொன்றுகேண்மோ யென விவையியம்பலுற்ரு

எம்பிரானினக்கு நாயேனெழிலுறுதாரமாயும்
நம்பெருவடிவமாயு நனித்துணர்தவ்வையாயுந்
தம்பெருர்தங்கையா யுந்தகவுறத்தனயையாயு
மும்பரும்புகழவுற்றேனுறுங்குறையுரைக்கவுண்டோ (௨)

ஆயினுநின்றற்கூறு மருமறையியம்புகின்ற
தூயதோர்யோகபாதத் துற்றிடுதுணிவினேடு
மேயதோரதுதானல்கும் விளங்கிடுஞ்சித்தியெல்லா
மாயமாசகலுமாறு வளங்குதிவள்ளலென்ருள் (௩)

என்றசொற்கேட்டுப்பார்க்க னினிதெனமகிழ்ச்சிபூத்து
குன்றுறண்மூலேயினுள்ளக் குறிப்புடனுனித்துநோக்கி
மன்றதன்மனத்தின்மீது மதிப்பருமருண்மீக்கொண்டு
நன்றுநின்கருத்ததென்று நலமுடனுரைக்கலுற்ருன் (௪)

சுபமதாய்ப்பள்ளிகொண்டு தூயதோர்தேசந்தன்னிற்
றபமுறமிதமாகாரந் தகவுடனிற்றபோது
கபமறச்சரீரசுத்தி கருதியேசெய்தபின்னர்
நிபமறநிலேக்கும்வண்ண நீள்சுகாதனத்திருந்தே (௫)

பிராணனும்வாயுதன்னேப் பேசியநாடிதோறும்
விராவுறநடத்திப்பின்னர் விளங்குபூரகத்துள்வாங்கி
பராவுறரேசகத்தாற் பற்றறப்புறத்தேவிட்டு
நிராவுறுகும்பகத்தா னிலேபெறச்சுரூபநாட்டே (௬)

அன்னதுசெய்தபின்றை யபானத்தின்றுவாரந்தன்னே
மன்னுங்கால்விரலினுலே வழிவிடாதடைத்துமூலந்
தன்னுறுசத்திதன்னேத் தகமையோடுற்றுநாடி [றே
மின்னெனுமொளியைநோக்கும் விதத்தினேப்பகர்துமன்

உந்தியேயிலிங்கமென்னு முயரவைய்வத்துறைப்பட்
பந்தியாதொட்டியாணம் பகரொளியனேத்துநோக்கி

முந்தியபுருவமத்தி முழுச்சோதிகண்டுவருகுச் [காணே
சிந்தையைக்குறிப்பிற்சோதித்துத் திகழ்சதாசிவனைக் (௮)

அண்ணத்தினுற்றுநாளு மயினுறுசுவையைக்காட்டும்
வண்ணரந்திரத்தைக்கையால் வகைபெறமலர்ச்செய்தே
தண்ணெனுந்தானுதன்னாற் றடைப்படவடைத்தலாலே
விண்ணுகேசரியென்றோதும் விளங்குமுத்திரையைநாட்
டே

மனமெங்குஞ்சென்றிடாது மதிதனையுலகமெல்லாஞ்
சினமிலாவிட்டத்தோடுஞ் சக்கரச்சமத்தில்வைத்தே
கனமுளவக்கிரண்டுங் காதலாய்ப்புருவமத்தி
தனதுளேவைத்துமேலாய்த் தரிநிறைசதாசிவத்தை(௧௦)

இந்தமெய்யோகந்தன்னை யின்பமாந்தேவராகு
மந்தரவாசரெல்லா மரியகேசரியாய்ச்சொல்வர் [ளு
சொந்தமாய்ப்பரீக்ஷையானற் சொல்லொணுவமிர்தநா
மிந்துமண்டலத்தைவிட்டு விளங்கியேயொளியில்வீழா

ஆனதுபற்றிவாயு மடங்கலுமங்கங்காகும்
பானமும்பசியுந்தூக்கம் பலவகைமயக்கம்யாவுந்
தானதுவதிகமாகாத் தவறிடாச்சித்திபெற்றுன்
மோனமாம்பிறப்பிறப்பு மொழிசுகதுக்கமின்றே (௧௨)

அந்தமொன்றில்லர்வீரா றமுகியநிலையந்தன்னிற்
பந்தமில்பிரம்மாயும் பாம்புநிர்த்தொந்தத்துற்றுங்
கந்தம்போனிறைந்தாருங் கருணையேகமலங்கூடிச்
சந்ததமுலாவுந்தானஞ் சந்திரமண்டலத்திற்றோன்றும்.

நீதியாமதனைப்பார்க்கி னினைமுதலொட்டியாணம்
பேதியாப்பீடனின்று பெருமையாஞ்சத்தியோடுஞ்
சோதியைத்தியானஞ்செய்தாற் சூக்குமந்தெரியுமேலா
மாதிதானமிர்தநல்குமவன் சொந்தஞ்சித்தியெல்லாம்

அன்புசேரிந்தச்சேட னுழியசிந்தைகொண்ட
முன்புறுராகமென்னு முழங்கியதுவேஷமாதி
துன்புறுமீராறென்று துலங்கியசித்தவிர்த்தி
யின்புடனசித்துவைய மிலங்கியகர்மநீத்தே (௧௫)

புத்திதான்பெருமையாகும் புகழொணுப்பிரமஞ்சேருஞ்
சத்தியேசித்திகேண்மோ சார்ந்திடுமிந்தியமான்மா
சித்தியாம்பிராணவாயு சிந்தையைச்செயித்தசெய்யோர்
சுத்தியாய்நாதந்தன்னிற் சொர்மனஞ்சென்றிருந்தால்

நாதமெய்லயமாஞ்சித்தி நாடிடுந்தூரக்கேள்வி
சாதனவிந்தின்கண்ணே தவறிடாலயிப்பராகி
லாதனந்தூரதிட்டி யளவிலாக்கியானமுண்டாம்
வேதமாமிந்தச்சித்தி விளம்பிலோதீர்க்கப்பார்வை(௧௭)

தன்னிலேகாலரூபஞ் சார்ந்தவனுய்வான்முக்கா
லன்னியர்தனுவின்முன்ன மன்புடனமர்ந்திருந்தா
லுன்னியவாறுசித்[illegible]லாபரகாயத்திற்
பின்னமில்பிரவேசந்[illegible]வர்க்கேயாகும்(௧௮

உச்சியினமிர்[illegible]ளிருந்துவோர்க்கு
மிச்சையாம்[illegible]பிறப்பிறப்பு